# நன்னூல் உரை வளம்

22

## நன்னூல் மூலமும் சொல்லடைவும் தொடரடைவும்

இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

நன்னூல் உரைவளம் (தொகுதி-22)

# நன்னூல் மூலமும் சொல்லடைவும் தொடரடைவும்

பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை—600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Nannūl mūlamum collaṭaivum toṭaraiṭum (Vol. 22)** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 710 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 392 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.170/- (Rupees One hundred and seventy only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை — 113

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றி யிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக்கிடக் கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.

வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மையுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவும் ஆழமும் உடையது. காலமும் கடும்புனலும் கொண்டதுபோக எஞ்சியன சிலவேயாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந்தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந் நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி, இன்றளவும் தனிச்சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரை விளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறு பலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரை வளத்தினை எம்நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத்

தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலா சாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர்,வ.குமாரசாமிப்புலவர், வை.மு.சடகோபராமானு சாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார், பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசசு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவார் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழிபெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல்லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரைவளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின், TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப் பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ் உரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப்பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான முனைவர் இரா.கண்ணன், சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ் உரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனப்பணிகளில் எம்முடன் இணைந்து பணியாற்றும் துணை இயக்குநர், பேராசிரியப் பெருமக்கள் மற்றும் அலுவலக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் எம் நன்றி உரித்தாகுக.

**கரு.அழ.குணசேகரன்**

சென்னை – 113.
12.01.2011.

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன. பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக்கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப்படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப் பட்டது. நன்னூல், ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக்கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும், சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சம காலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்றுவரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமையானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகி யுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலை நாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி, பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளையேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை **முனைவர் ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.11.2010 **இரா.கண்ணன்.**

சென்னை–55

பவணந்தி முனிவர் இயற்றியருளிய

# நன்னூல்

## சிறப்புப் பாயிரம்

மலர் தலை உலகின் மல்கு இருள் அகல
இலகு ஒளி பரப்பி யாவையும் விளக்கும்
[1]பருதியின் ஒரு தான் ஆகி முதல் ஈறு
ஒப்பு அளவு ஆசை முனிவு இகந்து உயர்ந்த
அற்புத மூர்த்தி தன் அலர் தரு தன்மையின்
மன இருள் இரிய மாண் பொருள் முழுவதும்
முனிவு அற அருளிய மூ அறு மொழியுளும்
குண கடல் குமரி குடகம் வேங்கடம்
எனும் நான்கு எல்லையின் இரும் தமிழ்க் கடலுள்
அரும் பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்
தொகை வகை விரியின் தருக என துன்னார்
இகல் அற நூறி இரு நிலம் [2]முழுவதும்
தனது எனக் கோலித் தன் மத வாரணம்
திசை தொறு நிறுவிய திறல் உறு தொல் சீர்க்
கரும் கழல் வெண்குடைக் கார் நிகர் வண் கைத்
திருந்திய செங்கோல் சீய கங்கன்
அருங் கலை விநோதன் அமர் ஆபரணன்
மொழிந்தனன் ஆக முன்னோர் நூலின்
வழியே நன்னூல் பெயரின் வகுத்தனன்
பொன் மதில் சனகைச் சன்மதி முனி அருள்
பன் அரும் சிறப்பின் பவணந்தி
என்னும் நாமத்து இரும் தவத்தோன் ஏ.

---

பாட வேறுபாடு:—

1. பரிதி

2. முழுதும்

# பாயிரம்

1. முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

2. பாயிரம் பொதுச் சிறப்பு என இரு பாற்றே.

3. நூலே நுவல்வோன் நுவலும் திறனே
கொள்வோன் கோடல் கூற்று ஆம் ஐந்தும்
எல்லா நூற்கும் [1]இயை பொதுப்பாயிரம்.

4. நூலின் இயல்பே நுவலின் ஓர் இரு
பாயிரம் தோற்றி மும்மையின் ஒன்றுஆய்
நால்பொருள் பயத்துஒடு எழுமதம் தழுவி
ஐ இரு குற்றமும் அகற்றி அம் மாட்சி ஒடு
எண்நான்கு உத்தியின் ஒத்துப் படலம்
என்னும் உறுப்பினின் சூத்திரம் காண்டிகை
விருத்தி ஆகும் விகற்ப நடை பெறுமே.

5. முதல் வழி [2]புடை என நூல் மூன்று ஆகும்.

6. அவற்றுள்,
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதன்நூல் ஆகும்.

7. முன்னோர் நூலின் முடிபு ஒருங்கு ஒத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூல் ஆகும்.

8. இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவேறு உடையது புடைநூல் ஆகும்.

---

பாட வேறுபாடு:–

1. இவை

## 2 .சார்பு

9. முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவம் என்பதற்கும் – முன்னோரின்வேறுநூல்
செய்தும்எனும் மேற்கோள்இல் என்பதற்கும்கூறு பழஞ் சூத்திரத்தின்
கோள்.

10. அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற் பயன்ஏ.

11. எழுவகை மதமே [1]உடம்படல் மறுத்தல்
பிறர்தம் மதமேல் கொண்டு களைவே
தாஅ ன்நாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே
பிறர்நூல் குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதுஒடு படாஅன் தன்மதங் கொளல்ஏ.

12. குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொல் புணர்த்தல் மயங்க வைத்தல்
வெற்று எனத் தொடுத்தல் மற்று ஒன்று விரித்தல்
சென்று தேய்ந்து இறுதல் நின்று பயன் இன்மை
என்று இவை ஈர்ஐம் குற்றம் நூற்கே.

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க்கு இனிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை உடைமை ஆழம் உடைத்து ஆதல்
முறையின் வைப்பே உலகம் மலையாமை
விழுமியது பயத்தல் விளங்கு உதாரணத்தது
ஆகுதல் நூலிற்கு அழகு எனும் பத்தே.

14. நுதலிப் புகுதல் ஒத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவுஇடம் கூறல்
தான்எடுத்து மொழிதல் பிறன்கோள் கூறல்
சொல்பொருள் விரித்தல் தொடர்ச்சொல் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தல் [1]மாட்டு எறிந்து ஒழுகல்

---

பாட வேறுபாடு:- 1 .மாட்டெறிந்தொழிதல்

இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் [1]முடிந்தவை முடித்தல்
உரைத்தும் என்றல்[2]உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக் காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்னது அல்லது இது என மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறநூன் முடிந்தது[3]தான் உடம்படுதல்
தன்குறி வழக்கம் மிக எடுத்து உரைத்தல்
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்
[4]ஒன்றின முடித்தல் தன்இனம் முடித்தல்
உய்த்து உணர வைப்பு என உத்தி எண் நான்கே

15. நூல்பொருள் வழக்கு ஒடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி அறிந்து இதற்கு இவ் வகை ஆம் எனத்
தகும் வகை செலுத்துதல் தந்திர உத்தி.

16. நேர்இன மணியை நிரல்பட வைத்து ஆங்கு
ஓர்இனப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்து என மொழிப உயர்மொழிப் புலவர்

17. ஒருநெறி[5]இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலம் ஆகும்.

18. சில்வகை எழுத்தின்[6]பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியின் செறித்து இனிது விளக்கித்
திட்ப நுட்பம் சிறந்தன சூத்திரம்

---

பாட வேறுபாடு.:–

1. முடிந்தது
2. உரைப்பாம் என்றல்
3. தான் உடன்படுதல்
4. ஒன்றன முடித்தல்
5. அன்றி
6. பல்பயப் பொருளைச்

19. ஆற்று ஒழுக்கு
[1]அரிமா நோக்கம் தவளைப் பாய்த்துப்
பருந்தின் வீழ்வு அன்ன சூத்திர நிலை.

20. பிண்டம் தொகை வகை குறியே செய்கை
கொண்டு இயல் புறனடைக் கூற்றன சூத்திரம்

21. பாடம் கருத்தே சொல்வகை சொல்பொருள்
தொகுத்து உரை உதாரணம் வினாவிடை விசேடம்
விரிவு அதிகாரம் துணிவு பயன் ஒடு
ஆசிரிய வசனம் என்று ஈர் ஏழ் உரை ஏ.

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை ஆக்கலானும்
சூத்திரத்து உள்பொருள் தோற்றுவ காண்டிகை

23. சூத்திரத்து உள்பொருள் அன்றியும் ஆண்டைக்கு
இன்றியமையா[2]யாவையும் விளங்கத்
தன் உரையானும் பிறநூலானும்
ஐயம் அகல ஐங் காண்டிகை உறுப்பொடு
மெய்யினை எஞ்சாது இசைப்பது விருத்தி.

24. பஞ்சிதன் சொல் அப் பனுவல் இழை ஆகச்
செஞ்சொல் புலவனே சேயிழையா – எஞ்சாத
கையே வாய் ஆகக் கதிரே மதியாக
மை இலா நூன் முடியும் ஆறு.

25. உரத்தின் வளம்பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளம்முருக்கிப் பொல்லா– மரத்தின்
கனக்கோட்டம் தீர்க்கும் நூல் அஃதே போல் [3]மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு.

26. குலன் அருள் தெய்வம் கொள்கை மேன்மை

---

பாட வேறுபாடு:–

1.கரிமான்
2.அமையாதி யாவையும்
3.மக்கள்

கலை பயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம் மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகு இயல் அறிவு ஒடு உயர் குணம் இனையவும்
அமைபவன் நூல் உரை ஆசிரியன் அன்னே.

27. தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவம் முயற்சி அளவின் பயத்தலும்
மருவிய நல்நிலம் மாண்பு ஆகும்ஏ.

28. அளக்கல் ஆகா அளவும் பொருளும்
துளக்கல் ஆகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளம்தரும் வண்மையும் மலைக்கே

29. ஐயம் தீரப் பொருளை உணர்த்தலும்
மெய்ந் நடுநிலையும் மிகுநிறை கோற்கே.

30. மங்கலம் ஆகி இன்றி அமையாது
யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர்வு உடையது பூ ஏ.

31. மொழி குணம் இன்மையும் இழிகுண இயல்பும்
அழுக்காறு அவா வஞ்சம் அச்சம் ஆடலும்
கழற்குடம் மடல்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங்கு [1]ஒப்பு என முரண் கொள் சிந்தையும்
உடையோர் இலர் ஆசிரியர் ஆகுதல் ஏ.

32. [2]பெய்தமுறை அன்றிப் பிறழ உடன்தரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீர்ஏ.

33. தானே தரக்கொளின் அன்றித் தன்பால்
மேவிக் கொளக் கொடா இடத்தது மடல்பனை

34. அரிதின் பெயக் கொண்டு அப் பொருள் தான் பிறர்க்கு
எளிது ஈவு இல்லது பருத்திக் குண்டிகை.

---

பாட வேறுபாடு:–

1. ஒப்பு அன
2. பெய்தல்

35. பல்வகை உதவி வழிபடு [1]பண்பின்
நல்லோர் ஒழித்து
அல்லோர்க்கு அளிக்கும் அது முடத்தெங்கு ஏ.

36. ஈதல் இயல்பே இயம்பும் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துஉழி இருந்து தன்தெய்வம் வாழ்த்தி
[2]உரைக்கப் படு பொருள் உள்ளத்து அமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகம்மலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்து அவன் உளம்
கோட்டம் இல் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப.

37. தன்மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடுவோனே
உரை கோளாளற்கு உரைப்பது நூல்ஏ.

38. அன்னம்ஆவே மண்ஒடு கிளியே
இல்லிக் குடம் மாடு எருமை நெய்யரி
அன்னர் தலை இடை கடை மாணாக்கர்.

39. களி மடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்நூற்கு அஞ்சித்
தடுமாறு உளத்தன் தறுகணன் பாவி
படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே.

40. கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பின் சார்ந்து
இரு என இருந்து சொல் எனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப்பாவையின் அத்தகவு அடங்கிச்
செவி வாய் ஆக நெஞ்சு களன் ஆகக்

---

பாட வேறுபாடு:-

1.பண்பினல்லோர்க்கு
2.உரைக்கப்படும் பொருள்

கேட்டவை [1]கேட்டு அவை விடாது உளத்து அமைத்துப்
போ எனப் போதல் என்மனார் புலவர்.

41. நூல் பயில் இயல்பே நுவலின் வழக்கு அறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
[2]ஆசான் சார்ந்து அவை [3]அமைவரக் கேட்டல்
அம் மாண்பு உடையோர் தம் ஒடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தல் என்று இவை
கடன் ஆகக் கொளின்ஏ [4]மடம் நனி இகக்கும்

42. ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்
பெருக நூலின் பிழைபாடு இலனே

43. முக்கால் கேட்பின் முறைஅறிந்து உரைக்கும்

44. ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்
கால் கூறு அல்லது [5]பற்றலன் ஆகும்

45. அவ் வினையாளர் ஒடு பயில்வகை [6]ஒருகால்
செவ்விதின் உரைப்ப அவ் [7]இருகாலும்
மை அறு புலமை மாண்பு உடைத்து ஆகும்.

46. அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி
நிழலின் [8]நீங்கான் நிறைந்த நெஞ்சம் ஒடு
எத் திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்
அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடு ஏ

---

பாட வேறுபாடு:–

1.கேட்பவை

2.இவ்வடி சில பிரதிகளில் இல்லை என்பார் உ.வே.சா.

3.அமைவுற

4.மடனனி

5.பற்றிலன் ஆகும்; பற்றலவாகும்

6.ஒருபால்

7.இருபாலும்

8.நீங்கா நிறைந்த

47. ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூல் பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயன் ஒடு [1]ஆய எண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத்து இயல்பே

48. காலம் களனே காரணம் என்று இம்
மூவகை ஏற்றி மொழிநரும் உளரே.

49. முதல் நூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள் செய்வித்தோன் தன்மை முதன் நிமித்தினும்
இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயர் ஏ.

50. தொகுத்தல் விரித்தல் தொகை விரி மொழிபெயர்ப்பு
எனத் தகும் நூல் யாப்பு ஈர் இரண்டு என்ப.

51. தன் ஆசிரியன் தன்னொடு கற்றோன்
தன் மாணாக்கன் தகும் உரைகாரன் என்று
இன்னோர் பாயிரம் இயம்புதல் [2]இயல்பே

52. தோன்றாத் தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தன் புகழ்தல் தகுதி அன்றே

53. மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்
[3]தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
[4]மின்னிய அவைஇடை வெல்உறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் [5]புகழ்தலும் தகும் புலவோற்கே.

54. ஆயிர முகத்தான் அகன்றது ஆயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே.

---

பாட வேறுபாடு.:–

1. ஆய் எண் பொருளும்
2. கடனே
3. தன்னிடை
4. மன்னிய
5. புகழ்வதும்

55. மாடக்குச் சித்திரமும் [1]மாநகர்க்குக் கோபுரமும்
ஆடுஅமைத்தோள் நல்லார்க்கு அணியும்போல் – நாடிமுன்ஐது
உரையா நின்ற [2]அணிந்துரையை எந்நூற்கும்
பெய்து உரையா வைத்தார் பெரிது.

பாயிரம் முற்றிற்று

பாட வேறுபாடு:–

1. மாணகர்க்கு

2. அணிந்துரையே

# எழுத்ததிகாரம்

## 1.எழுத்தியல்

56. பூமலி அசோகின் புனை நிழல் அமர்ந்த
நான்முகன் தொழுது நன்கு இயம்புவன் எழுத்தே.

57. எண் பெயர் முறை பிறப்பு உருவம் மாத்திரை
முதல் ஈறு இடைநிலை போலி என்றா
பதம் புணர்பு[1] எனப் பன்னிருபாற்று அதுவே.

58. மொழிமுதல் காரணம் ஆம் அணுத் திரள் ஒலி
எழுத்து அது முதல் சார்பு என இரு வகைத்தே.

59. உயிரும் உடம்பும் ஆம் முப்பதும் முதலே.

60. உயிர்மெய் ஆய்தம் உயிர் அளபு ஒற்று அளபு
அஃகிய இ உ ஐ ஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத்து ஆகும்.

61. உயிர்மெய் இரட்டுநூற்று எட்டு உயர் ஆய்தம்
எட்டு உயிர் அளபு எழு மூன்று ஒற்று அளபெடை
ஆறு ஏழ் அஃகும் இம் முப்பான் ஏழ்
உகரம் ஆறு ஆறு ஐகான் மூன்றே
ஔகான் ஒன்றே மஃகான் மூன்றே
ஆய்தம் இரண்டு ஒடு சார்பெழுத்து உறுவிரி
ஒன்று ஒழி முந்நூற்று எழுபான் என்ப.

62. இடுகுறி காரணப்பெயர் பொதுச் சிறப்பின.

63. அம் முதல் ஈர் ஆறு ஆவி கம் முதல்
மெய் மூ ஆறு என விளம்பினர் புலவர்.

---

பாட வேறுபாடு:—

1. புணர்ப்பென

64. அவற்றுள்,
அ இ உ எ ஒக் குறில் ஐந்தே.

65. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்.

66. அ இ உம் முதல் தனிவரின் சுட்டே.

67. எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினா ஆகும்மே.

68. வல்லினம் க ச ட த ப ற என ஆறே.

69. மெல்லினம் ங ஞ ண ந ம ன என ஆறே.

70. இடையினம் ய ர ல வ ழ ள என ஆறே.

71. ஐ ஔ இ உச் செறிய முதல் எழுத்து
இவ் இரண்டு ஓர் இனம் ஆய் வரும் முறையே.[1]

72. தானம் முயற்சி அளவு பொருள் வடிவு
ஆன ஒன்று ஆதி ஓர்புடை ஒப்பு இனமே

73. சிறப்பினும் இனத்தினும் செறிந்து ஈண்டு அம் முதல்
நடத்தல் தானே முறை ஆகும்மே.

74. நிறைஉயிர் முயற்சியின் உள்வளி துரப்ப
எழும் அணுத்திரள் உரம் கண்டம் உச்சி
மூக்கு உற்று இதழ் நாப் பல் அணத் தொழிலின்
வெவ்வேறு எழுத்து ஒலி ஆய்வரல் பிறப்பே.

75. அவ்வழி,
ஆவி இடைமை இடம்மிடறு ஆகும்
மேவும் மென்மை மூக்கு உரம் பெறும் வன்மை.

---

பாட வேறுபாடு:–

1. வரன்முறையே

76. அவற்றுள்
முயற்சியுள் அ ஆ அங்காப்பு உடைய.

77. இ ஈ எ ஏ ஐ அங்காப்பு ஒடு
அண்பல் முதல் நா விளிம்பு உற வருமே.

78. உ ஊ ஒ ஓ ஔ இதழ் குவிவே.

79. க ங உம் ச ஞ உம் ட ண உம் முதல் இடை
நுனிநா அண்ணம் உற முறை வருமே.

80. அண்பல் அடிநா முடி உறத் த ந வரும்.

81. மீகீழ் இதழ் உறப் பம் மப் பிறக்கும்

82. அடிநா அடிஅணம் உறயத் தோன்றும்.

83. அண்ண நுனிநா வருட ர ழ வரும்

84. அண்பல் முதல் அண்ணமும் முறையின்
நா விளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆய் இரண்டும் பிறக்கும்.

85. மேற்பல் இதழ் உற மேவிடும் வவ்வே.

86. அண்ணம் நுனிநா நனி [2] உற ற ன வரும்.

87. ஆய்தக்கு இடம் தலை அங்கா முயற்சி
சார்பெழுத்து ஏனையவும் தம்முதல் அனைய.

88. எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பில்
திரிபும் தம்தமின் சிறிதுஉள ஆகும்.

---

பாட வேறுபாடு:-

1. இதணாப்
2. நனியுறிற்

89. புள்ளிவிட்டு அவ் ஒடு [1] முன்உருவு ஆகியும்
ஏனை உயிர் ஒடு [2] உருபு [3] திரிந்தும்
உயிரளவு ஆய் அதன்
வடிவு ஒழித்து இருவயின் பெயர்ஒடும்
ஒற்று முன்ஆய் வரும் உயிர் மெய்யே.

90. குறிஅதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிர்ஒடு புணர்ந்த வல்ஆறன் மிசைத்தே

91. இசைகெடின் மொழி முதல் இடை கடை நிலைநெடில்
அளபு எழும் அவற்று அவற்றின் இனக் குறில் குறியே.

92. ங ஞ ண ந ம ன வ ய ல ள ஆய்தம்
அளபு ஆம் குறில் இணை குறில்கீழ் இடை கடை
மிகலே அவற்றின் குறிஆம் வேறே.

93. யகரம் வரக்குறள் உத்திரி இகரமும்
அசைச் சொல் மியாவின் இகரமும் குறிய.

94. நெடில்ஒடு ஆய்தம் உயிர்வலி மெலிஇடைத்
தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே.

95. தன்சுட்டு அளவுஒழி ஐம் மூ வழியும்
நையும் ஔவும் முதல் அற்று ஆகும்.

96. ண ன முன்னும் வஃகான் மிசையும் மக் குறுகும்.

97. ல ள ஈற்று இயைபின் ஆம் ஆய்தம் அஃகும்.

98. தொல்லை வடிவின எல்லா எழுத்தும் ஆண்டு
எய்தும் எகர ஒகர மெய் புள்ளி.

---

பாட வேறுபாடு:–

1. முன்னுருவு
2. உருவு
3. திரிந்து முயிரளவாய்

99. மூன்று உயிர் அளபு இரண்டாம் நெடில் ஒன்றே
குறிலோடு ஐ ஔக் குறுக்கம் ஒற்றுஅளபு
அரை ஒற்று இ உக் குறுக்கம் ஆய்தம்
கால் குறள் மஃகான் ஆய்த மாத்திரை.

100. இயல்பு எழு மாந்தர் இமை நொடி மாத்திரை.

101. ஆவியும் ஒற்றும் [1]அளவு இறந்து இசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற்று ஆதியின்.

102. பன்ஈர் உயிரும் க ச த ந ப ம வ ய
ஞ ங ஈர் ஐந்து உயிர் மெய்யும் மொழி முதல்

103. உ ஊ ஒ ஓ அல ஒடு அம் முதல்

104. அ ஆ உ ஊ ஓ ஔ அம் முதல்.

105. அ ஆ எ ஒவ் ஒடு ஆகும் ஞம் முதல்

106. [2]சுட்டி யா எகர வினாவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதல் ஆகும்மே.

107. ஆவி ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள மெய்
சாயும் உகரம் நால் ஆறும் ஈறே.

108. குற்று உயிர் அளபின் ஈறு ஆம் [3]எகரம்
மெய்ஒடு ஏலா ஒ நவ் ஒடு ஆம் ஔ
ககர வகரம் ஒடு ஆகும் என்ப.

109. நின்ற நெறியே உயிர்மெய் முதல் ஈறுஏ.

110. கசதப ஒழித்த ஈர் ஏழ் அன் கூட்டம்
மெய்ம்மயக்கு உடன்நிலை ர ழ ஒழித்து ஈர் எட்டு

---

பாட வேறுபாடு:-

1. அளபிறந்து
2. சுட்டு யா
3. ஔக்ககர

ஆகும் இவ் இருபான் மயக்கும் மொழி இடை
மேவும் உயிர்மெய் மயக்கு அளவு இன்று ஏ.

111. ஙம் முன் கவ் ஆம் வம் முன் யவ்ஏ

112. ஞ ந முன் தம் இனம் யகரம் ஒடு ஆகும்

113. ட ற முன் க ச ப மெய் உடன் மயங்கும்.

114. ண ன முன் இனம் க ச ஞ ப ம ய வ வரும்.

115. மம் முன் ப ய வ மயங்கும் என்ப

116. ய ர ழ முன்னர் மொழிமுதன் மெய் வரும்.

117. ல ள முன் க ச ப வ ய ஒன்றும்மே

118. ர ழ அல்லன தம்முன் தாம் உடன்நிலையும்

119. ய ர ழ ஒற்று இன் முன் க ச த ப ங ஞ ந ம
ஈர் ஒற்று ஆம் ர ழத் தனிக்குறில் அணையா

120. ல ள மெய் திரிந்த ன ண முன் மகாரம்
நைந்து ஈர் ஒற்று ஆம் செய்யுள் உள்ஏ

121. தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப.

122. மகர இறுதி அஃறிணைப் பெயரின்
னகரம் ஒடு உறழா நடப்பன உளஏ.

123. அ ஐ முதல் இடை ஒக்கும் ச ஞ ய முன்.

124. ஐகான் அவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளர்ஏ

125. அம்முன் இகரம் யகரம் என்று இவை

எய்தின் ஐ ஒத்து இசைக்கும் அவ் ஒடு
உவ் உம் வவ் உம் ஔ ஓர் அன்ன.

126. மெய்கள் அகரம்மும் நெட்டுஉயிர் காரமும்
[1] ஐ ஔ கானும் இருமைக் குறில் இவ்
இரண்டொடு கரமும்ஆம் சாரியை பெறும் பிற.

127. மொழிஆய்த் தொடரினும் முன்அனைத்து எழுத்து ஏ

முதலாவது எழுத்தியல் முற்றிற்று

# 2. பதவியல்

128. எழுத்து ஏ தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின்
பதம்ஆம் அது பகாப்பதம் பகுபதம் என
இருபால் ஆகி இயலும் என்ப.

129. உயிர்மவில் ஆறும் த ப நவில் ஐந்தும்
க வ சவில் நாலும் யவ்வில் ஒன்றும்
ஆகும் நெடில் நொதுஆம் குறில் இரண்ஒடு
ஓர் எழுத்து இயல் பதம் ஆறு ஏழ் சிறப்பின.

130. பகாஅப் பதம் ஏழ்உம் பகுபதம் ஒன்பதுஉம்
எழுத்து ஈறு ஆகத் தொடரும் என்ப.

131. பகுப்பால் பயன் அற்று இடுகுறி ஆகி
முன்னே ஒன்று ஆய் முடிந்து இயல்கின்ற
பெயர் வினை இடை உரி நான்கும் பகாப்பதம்.

---

பாட வேறுபாடு.:–

1. ஐ ஔக்கானும்

132. பொருள் இடம் காலம் சினை குணம் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினை பகுபதம் ஏ

133. பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியும் எப் பதங்களும்.

134. தத்தம், [1] பகாஅப் பதங்கள்ஏ [2] பகுதி ஆகும்.

135. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை உண்மை நுண்மை இவற்று எதிர்
இன்னவும் பண்பின் பகாநிலைப் பதம் ஏ.

136. ஈறு போதல் இடை உகரம் இஆதல்
ஆதி நீடல் அடி அகரம் ஐஆதல்
தன் ஒற்று இரட்டல் முன்நின்ற மெய்திரிதல்
இனம் மிகல் இனையவும் பண்பிற்கு இயல்பு ஏ.

137. நட வா மடி சீ விடு கூ வே வை
[3] நொப் போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின்
தேய் பார் செல் வவ் வாழ் கேள் [4] அஃகு என்று எய்திய
இருபான் மூன்றாம் ஈற்றவும்
செய் என் ஏவல் வினைப் பகாப்பதம் ஏ.

138. செய் என் வினைவழி விப்பி தனி வரின்
செய்வி என் ஏவல் இணையின் ஈர் ஏவல்

139. விளம்பிய பகுதி வேறு ஆதல்உம் விதி ஏ.

---

பாட வேறுபாடு:–

1. பகாப் பதங்களே
2. பகுதியாம்
3. நொ போ
4. (அ) அஃகென் றெய்திய விருபான் மூன்றா மீற்றவும்; (ஆ) அஃகெ னிருபான் மூன்றா மீற்றவும்; (இ) அஃகெ னிருபான் மூன்று மீற்றவாய

140. அன் ஆன் அள் ஆள் அர் ஆர் பம் மார்
அ ஆ கு டு து று என் ஏன் அல் அன்
அம் ஆம் எம் ஏம் ஒடு உம் ஊர்
க ட த ற ஐ ஆய் இம் மின் இர் ஈர்
ஈயர் க யவும் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலஏ.

141. இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பலின்
பகுதி விகுதி பகுத்து இடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க்கு இடைநிலை எனல்ஏ.

142. த ட ற ஒற்று இன் ஏ ஐம்பால் மூ இடத்து
இறந்த காலம் தரும் தொழில் இடைநிலை.

143. ஆ நின்று கின்று கிறு மூ இடத்தின்
ஐம்பால் நிகழ் பொழுது அறைவினை இடைநிலை

144. பவ்வ மூ இடத்து ஐம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை ஆம் இவை சில இல.

145. றவ் ஒடு உகர உம்மை நிகழ்பு அல்லவும்
தவ்வொடு இறப்பும் எதிர்வும் டவ்வொடு
கழிவும் கவ்ஒடு எதிர்வும் இன் ஏவல்
வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தம்
செலவொடு வரவும் செய்யும் நிகழ்பு எதிர்வும்
எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே.

146. இடையின் நான்கும் ஈற்றில் இரண்டும்
அல்லா அச்சை வருக்க முதல் ஈறு
யவ் ஆதி நான்மை எவ்வாகும் ஐயம்
பொது எழுத்து ஒழிந்த நால் ஏழும் திரியும்

147. அவற்றுள்,
ஏழாம் உயிர் இய்யும் இருவும் ஐ வருக்கத்து
இடையில் மூன்றும் அவ்வம் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேல் ஒன்று சடவும் இரண்டு சதவும்

மூன்றே யகவும் ஐந்து இரு கவ்வும்
ஆ ஈறு ஐயும் மீ ஈறு இகரமும்.

148. ரவ்விற்கு அம்முதல் ஆம் முக்குறிலும்
லவ்விற்கு இம் முதல் இரண்டும் யவ்விற்கு
இய்யும் மொழி முதல் ஆகி முன்வருமே.

149. இணைந்து இயல் காலை ய ர லக்கு இகரமும்
மவ்வக்கு உகரமும் நகரக்கு அகரமும்
மிசைவரும் ரவ்வழி உவ்வும் ஆம் பிற.

150. ற ன ழ எ ஒவ்வும் உயிர்மெய்யும் உயிரளபு
அல்லாச் சார்பும் தமிழ் பிற பொது ஏ.

இரண்டாவது பதவியல் முற்றிற்று

## 3. உயிரீற்றுப் புணரியல்

151. மெய்உயிர் முதல் ஈறுஆம்இரு பதங்களும்
தன்ஒடும் பிறிதுஒடும் அல்வழி வேற்றுமைப்
பொருளின் பொருந்துழி நிலை வருமொழிகள்
இயல்புஒடு விகாரத்து இயைவது புணர்ப்பு ஏ.

152. வேற்றுமை [1] ஐம் முதல் ஆறு ஆம் அல்வழி
தொழில் பண்பு உவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளி ஈர் எச்சம் முற்று இடை உரி
தழுவு தொடர் அடுக்கு என ஈர் ஏழ் ஏ.

153. விகாரம் அனைத்தும் மேவலது இயல்பு ஏ.

---

பாட வேறுபாடு.:–

1. ஐ முதல்

154. தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழி மூஇடத்தும் ஆகும்.

155. வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தல் உம் வரும் செய்யுள் வேண்டுழி.

156. ஒருமொழி மூவழிக் குறைதலும் [1]அனைத்து ஏ.

157. ஒருபுணர்க்கு இரண்டும் மூன்றும் உறப் பெறும்

158. எண் மூ எழுத்து ஈற்று எவ்வகை மொழிக்கும்
முன் வரு ஞ ந ம ய வக்கள் இயல்பும்
குறில் வழி அத்தனி ஐ நொ து முன் மெலி
மிகலும் ஆம் ண ள ன ல வழி நத் திரியும்.

159. பொதுப்பெயர் உயர்திணைப் பெயர்கள் ஈற்று மெய்
வலி வரின் இயல்பு ஆம் ஆவி ய ர முன்
வன்மை மிகா சில விகாரம் ஆம் உயர்திணை.

160. ஈற்று யா வினா விளிப் பெயர் முன் வலி இயல்புஏ.

161. ஆவி ய ர ழ இறுதி முன்னிலை வினை
ஏவல் முன் வல்லினம் இயல்புஒடு விகற்புஏ.

162. இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர் வழி வவ்உம் ஏமுன் இவ் இருமையும்
உயிர் வரின் உடம்படுமெய் என்று ஆகும்.

163. எகர வினா முச்சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கில் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறிஏ.

164. உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடும்
யவ்வரின் இய்யாம் முற்றும் அற்று ஒரோவழி.

---

பாட வேறுபாடு:-

1. உரித்தே

165. இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும் வித வாதன மன்னே.

166. மரப்பெயர் முன்னர் இன மெல் எழுத்து
வரப்பெறு நவும் உள வேற்றுமை வழியே.

167. செய்யிய என்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரின் எச்சம் முற்று ஆறன் உருபே
அஃறிணைப் பன்மை அம்ம முன் இயல்பே.

168. வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
ஏகலும் உரித்து அஃ து ஏகினும் இயல்புஏ.

169. சாவ என்மொழி ஈற்று உயிர்மெய் சாதலும் விதி

170. பல சில எனும் இவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் அகரம் ஏக
லகரம் றகரம் ஆகல் உம் பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற.

171. அல்வழி ஆ மா மியா முற்று முன்மிகா.

172. குறியதன் கீழ்ஆக் குறுகலும் அதன்ஓடு
உகரம் ஏற்றலும் இயல்பும் ஆம் தூக்கின்.

173. அன்றி இன்றி என் வினை எஞ்சு இகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே.

174. உரிவரின் நாழியின் ஈற்று உயிர்மெய் கெட
மருவும் டகரம் உரியின் வழியே
யகர உயிர்மெய் ஆம் ஏற்பன வரினே.

175. சுவைப்புளி முன் இன மென்மையும் தோன்றும்.

176. அல்வழி இ ஐ முன்னர் ஆயின்
இயல்பும் இகலும் விகற்பமும் ஆகும்.

177. ஆ முன் பகரஈ அனைத்தும் வரக் குறுகும்
மேலன அல்வழி இயல்பு ஆகும் ஏ.

178. பவ்வீ நீ மீ முன்னர் அல்வழி
இயல்பு ஆம் வலி மெலி மிகலும் ஆம் மீக்கு ஏ.

179. மூன்று ஆறு உருபு எண் வினைத்தொகை சுட்டு ஈறு
ஆகும் உகரம் முன்னர் இயல்பு ஆம்.

180. அது முன் வரும் அன்று ஆன்று ஆம் தூக்கின்

181. வன்தொடர் அல்லன முன் மிகா அல்வழி.

182. இடைத்தொடர் ஆய்தத்தொடர் ஒற்று இடையின்
மிகா நெடில் உயிர்த்தொடர் முன் மிகா வேற்றுமை.

183. நெடில்ஒடு உயிர்த்தொடர்க் குற்று உகரங்களுள்
ட ற ஒற்று இரட்டும் வேற்றுமை மிக ஏ.

184. மென்தொடர் மொழியுள் சில வேற்றுமையில்
தம் இனம் வன்தொடர்ஆகா மன்னே.

185. ஐ ஈற்று உடைக்குற்று உகரமும் உள ஏ.

186. திசைஒடு திசையும் பிறவும் சேரின்
நிலை ஈற்று உயிர்மெய் கவ்ஒற்று நீங்கலும்
றகரம் ன ல ஆத் திரிதலும் ஆம் பிற.

187. தெங்கு நீண்டு ஈற்று உயிர் மெய்கெடும் காய் வரின்.

188. எண்நிறை அளவும் பிறவும் எய்தின்
ஒன்று முதல் எட்டு ஈறு ஆம் எண்ணுள்
முதல் ஈர் எண் முதல் நீளும் மூன்று ஆறு
ஏழ் குறுகும் ஆறு ஏழு அல்லவற்றின்
ஈற்று உயிர்மெய்யும் ஏழன் உயிரும்
ஏகும் ஏற்புழி என்மனார் புலவர்.

189. ஒன்றன் புள்ளி ரகரம் ஆக
இரண்டன் ஒற்று உயிர் ஏக உவ் வரும் ஏ.

190. மூன்றன் உறுப்பு அழிவும் வந்ததும் ஆகும்.

191. நான்கன் மெய்யே ல ற ஆகும்மே

192. ஐந்தன் ஒற்று அடைவதும் இனமும் கேடும்.

193. எட்டன் உடம்பு ணவ் ஆகும் என்ப.

194. ஒன்பான்ஒடு பத்து நூறும் ஒன்றின்
முன்னதின் ஏனைய முரணி ஒவ்ஒடு
தகரம் நிறீஇப் பஃது அகற்றி னவ்வை
நிரலே ண ள ஆத் திரிப்பது நெறியே.

195. முதல் இரு நான்காம் எண் முனர்ப் பத்தின்
இடை ஒற்று ஏகல் ஆய்தம் ஆகல்
என இரு விதியும் ஏற்கும் என்ப.

196. ஒரு பஃது ஆதி முன் ஒன்று முதல் ஒன்பான்
எண்ணும் அவை ஊர் பிறவும் எய்தின்
ஆய்தம் அழிய ஆண்டு ஆகும் தவ்வே.

197. ஒன்று முதல் ஈர் ஐந்து ஆயிரம் கோடி
எண் நிறை அளவும் பிற வரின் பத்தின்
ஈற்று உயிர்மெய் கெடுத்து இன்னும் இற்றும்
ஏற்பது ஏற்கும் ஒன்பதும் இனைத்து ஏ.

198. இரண்டு முன்வரின் பத்தின் ஈற்று உயிர்மெய்
கரந்திட ஒற்று னவ் ஆகும் என்ப.

199. ஒன்பது ஒழித்த எண் ஒன்பதும் இரட்டின்
முன்னதின் முன் அலஒடு உயிர்வரின்
வவ்வும் மெய் வரின் வந்ததும் மிகல் நெறி.

200. பூப்பெயர் முன் இன மென்மையும் [1]தோன்றும்

201. இடைச்சொல் ஏ ஓ முன் வரின் இயல்பு ஏ.

202. வேற்றுமை ஆயின் ஐகான் இறுமொழி
ஈற்று அழிவு ஒடும் அம் ஏற்பவும் உள ஏ.

203. பனை முன் கொடி வரின் மிகலும் வலி வரின்
ஐ போய் அம்மும் திரள் வரின் உறழ்வும்
அட்டு உறின் ஐ கெட்டு அம் நீள்வும் ஆம் வேற்றுமை.

மூன்றாவது உயிரீற்றுப் புணரியல் முற்றிற்று

## 4. மெய்யீற்றுப் புணரியல்

204. உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பு ஏ.

205. தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்.

206. தன்ஒழி மெய்ம்முன் யவ் வரின் இகரம்
துன்னும் என்று துணிநரும் உளர் ஏ

207. ஞ ண ந ம ல வ ள ன ஒற்று இறு தொழில்பெயர்
ஏவல் வினை நனி யவ்வல் மெய் வரின்
உவ் [2]உறும் ஏவல் உறா சில சில்வழி.

---

பாட வேறுபாடு:-

1 .மென்மையும் புணரும்

2. ஏவலுறா

208. நவ்இறு தொழில்பெயர்க்கு அவ்வும் ஆம் வேற்றுமை.

209. ண ன வல்லினம்[1] வரட் டறவும் பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக்கு அல்வழிக்கு
அனைத்து மெய்வரினும் இயல்பாகும் ஏ.

210. குறில் அணைவு இல்லா ண னக்கள் வந்த
நகரம் திரிந்துழி நண்ணும் கேடு ஏ.

211. சாதி குழூஉப் பரண் கவண் பெயர் இறுதி
இயல்பு ஆம் வேற்றுமைக்கு உணவு எண் சாண் பிற
டவ் ஆகலும் ஆம் அல்வழியும் ஏ.

212. னஃகான் கிளைப்பெயர் இயல்பும் அஃகான்
அடைவும் ஆகும் வேற்றுமைப் பொருட்கு ஏ.

213. மீன் றவ்வொடு பொரூஉம் வேற்றுமை வழி ஏ.

214. தேன்மொழி மெய்வரின் இயல்பும் மென்மை
மேவின் இறுதி அழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலும்ஆம் இருவழி
215. மரம்அல் எகின் மொழி இயல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலும் ஆகும்.

216. குயின் ஊன் வேற்றுமைக்கண்ணும் இயல்பு ஏ.

217. மின் பின் பன் கன் தொழில்பெயர் அனைய
கன் அவ் வேற்று மென்மையோடு உறழும்.

218. தன் என் என்பவற்று ஈற்று னவ் வன்மையோடு
உறழும் நின் ஈறு இயல்பு ஆம் உற ஏ.

219. மவ் ஈறு ஒற்று அழிந்து உயிர் ஈறு ஒப்பவும்
வன்மைக்கு இனம் ஆத் திரிபவும் ஆகும்.

---

பாட வேறுபாடு:–

1. முழுதும்

220. வேற்றுமை மப் போய் வலிமெலி உறழ்வும்
அல்வழி உயிர் இடை வரின் இயல்பும் உள.

221. நும் தம், எம் நம் ஈறு ஆம் அவ்வரு ஞ ந ஏ.

222. அகம் முனர்ச் செவி கை வரின் இடையன கெடும்

223. ஈமும், கம்மும் உருமும் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக்கு அவ்வும் பெறும் ஏ.

224. ய ர ழ முன்னர்க் க ச த ப அல்வழி
இயல்பும் மிகலும் ஆகும் வேற்றுமை
மிகலும் இனத்தோடு உறழ்தலும் விதி மேல்.

225. தமிழ் அவ் உறவும் பெறும் வேற்றுமைக்கே
தாழும் கோல் வந்து உறுமேல் அற்றே.

226. கீழின் முன் வன்மை விகற்பமும் ஆகும்.

227. ல ள வேற்றுமையில் ற டவும் அல்வழி
அவற்றோடு உறழ்வும் வலி வரின் ஆம் மெலி
மேவின் ன ணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழியானும் என்ப.

228. குறில் வழி ல ளத் தவ் அணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழியான் ஏ.

229. குறில் செறியா ல ள அல்வழி வந்த
தகரம் திரிந்த பின் கேடும் ஈரிடத்தும்
வரு நந் திரிந்தபின் மாய்வும் வலி வரின்
இயல்பும் திரிபும் ஆவன உள பிற.

230. ல ள ஈறு தொழில்பெயர் ஈர் இடத்தும் உவ் உறா
வலி வரின் அல்வழி இயல்பும் ஆவன உள.

231. வல்லே தொழிற்பெயர் அற்று இரு வழியும்
பலகை நாய் வரினும் வேற்றுமைக்கு அவ்வும் ஆம்.

232. நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்வழியானும் றகரம் ஆகும்

233. இல் என் இன்மைச் சொற்கு ஐ அடைய
வன்மை விகற்பமும் ஆகாரத்தொடு
வன்மை ஆகலும் இயல்பும் ஆகும்.

234. புள்ளும் வள்ளும் தொழில் [1] பெயரும் மானும்.

235. சுட்டு வகரம் [2] மூ இனம் உற முறையே
ஆய்தமும் மென்மையும் இயல்பும் ஆகும்.

236. தெவ் என் மொழியே தொழில்பெயர் அற்றே
மவ் வரின் வஃகான் மவ்வும் ஆகும்.

237. [3] ன லமுன் ற னவும் ண ளமுன் ட ணவும்
ஆகும் த நக்கள் ஆயுங்காலே.

238. உருபின் [4] முடிப்பவை ஒக்கும் [5] அப் பொருளினும்.

239. இடை உரி வடசொலின் இயம்பிய கொளாதவும்
போலியும் [6] மருவும் பொருந்திய ஆற்றிற்கு
இயையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறி ஏ

நான்காவது மெய்யீற்றுப் புணரியல் முற்றிற்று.

---

பாட வேறுபாடு:–

1. பெயர் மானும்
2. மூவினம் வர
3. 'லனமுன் றனவும் ளணமுன் டணவும்' எனப் பாடமும் அதற்கேற்ப உரையும் உதாரணங்களும் பழம்பிரதிகள் பலவற்றிற் காணப்படுகின்றன' என்பார் உ.வே.சா.
4. முடிபவை
5. இப்பொருளினும்
6. மரூஉவும்

# 5. உருபு புணரியல்

240. ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என
வரு பெயர் ஐந்து ஒடு பெயர் முதல் இரு நான்கு
உருபும் உறழ் தர நாற்பது ஆம் உருபே.

241. பெயர்வழித் [1]தன் பொருள் தர வரும் உருபு ஏ.

242. ஒற்று உயிர் முதல் ஈற்று உருபுகள் புணர்ச்சியின்
[2]ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பு ஏ.

243. பதம் முன் விகுதியும் பதமும் உருபும்
புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை
வருதலும் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.

244. அன் ஆன் இன் அல் அற்று இற்று அத்து அம்
தம் நம் நும் ஏ அ உ ஐ கு ன
[3]இன்ன பிறவும் பொதுச்சாரியையே.

245. எல்லாம் என்பது இழிதிணை ஆயின்
அற்று ஒடு உருபின் மேல் உம் உறும்ஏ
அன்றேல் நம் இடை அடைந்து அற்று ஆகும்.

246. எல்லாரும் எல்லீரும் என்பவற்று உம்மை
தள்ளி நிரலே தம் நும் சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே.

247. தான் தாம் நாம் முதல் குறுகும் யான் யாம்
நீ நீர் என் எம் நின் நும் ஆம் பிற
குவ்வின் அவ்வரும் நான்கு ஆறு இரட்டல.

---

பாட வேறுபாடு:-

1. தம் பொருள்
2. ஒக்குமன்னப் பெயர்
3. அன்ன பிறவும்

248. ஆ மா கோ னவ் அணையவும் பெறுமே

249. ஒன்று முதல் [1]எட்டு ஈறு ஆம் எண் ஊர்
பத்தின் முன் ஆன் வரின் ப ஒற்று ஒழிய மேல்
எல்லாம் ஒடும் ஒன்பதும் இற்றே.

250. வவ் இறு சுட்டிற்கு அற்று உறல் வழியே.

251. சுட்டின் முன் ஆய்தம் அன்வரின் கெடுமே.

252. அத்தின் அகரம் அகரமுனை இல்லை

253. இதற்கு இது சாரியை எனின் [2]அளவு இன்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்து இடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்ற [3]உணர்த்தல் உரவோர் நெறியே.

254. விகுதி பதம் சாரியை உருபு அனைத்தினும்
உரைத்த [4]விதியின் ஓர்ந்து ஒப்பன கொளலே.

255. இயல்பின் விகாரமும் விகாரத்து இயல்பும்
உயர்திணை இடத்து விரிந்தும் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவும் ஆகும் ஐ உருபே.

256. புள்ளியும் உயிரும் ஆய் இறு சொல்முன்
தம்மின் ஆகிய தொழில்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும்.

---

பாட வேறுபாடு:-

1. எட்டளவாம்
2. அளபு இன்மையின்
3. உணர்த்துதல்
4. விதியுளோர்ந்

57. இதற்கு இது [1] முடிபு என்று எஞ்சாது யாவும்
விதிப்ப அளவு இன்மையின் விதித்தவற்று இயலான்
வகுத்து உரையாதவும் வகுத்தனர் கொளலே.

ஐந்தாவது உருபு புணரியல் முற்றிற்று

கட்டளைக் கலித்துறை

அடையென் பெயர்முறை தோற்றம் வடிவள வாதியந்தம்
இடைநிலை போலியென் றிரைந் தெழுத்து மிருபதமும்
படுபுணர் [2] மூன்றி னியல்பும் விகாரமுஞ் சாரியையும்
உட [3] னுணர் வாரை யெழுத்தறி வாரென்ப ருத்தமரே.

வெண்பா

எழுபா னிரண்டெழுத்தி னேற்றபதத் தைஞ்ஞான்
கொடுமூன் றுயிரிறைம் பான்மூன் – றருமெய்யி
றாறா றுருபியன்மூ வாறா மெழுத்துரைநூற்
பாவிரு நூற் றோரிரண்டாப் பார்

எழுத்ததிகாரம் முற்றிற்று

---

பாட வேறுபாடு.:–

1. முடிவென்று
2. மூன்று மியல்பும்
3.னறிவாரை

# சொல்லதிகாரம்

## 1.பெயரியல்

258. முச்[1] சகம் நிழற்றும் முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே.

259. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி என்றா
இருதிணை ஐம்பால் பொருளையும் தன்னையும்
மூவகை இடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

260. ஒருமொழி ஒருபொருளன ஆம் தொடர்மொழி
பலபொருளன பொது இருமையும் ஏற்பன.

261. மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்று உயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

262. ஆண் பெண் பலர் என முப்பாற்று உயர்திணை.

263. ஒன்றே பல என்று இருபாற்று அஃறிணை.

264. பெண்மை விட்டு[2] ஆண் அவாவுவ பேடு ஆண்பால்
ஆண்மை விட்டு அல்லது அவாவுவ பெண்பால்
இருமையும் அஃறிணை அன்னவும் ஆகும்.

265. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பிற்
பெறப்படும் திணை பால் அனைத்தும் ஏனை
இடத்து அவற்று ஒருமை பன்மைப் பாலே

---

பாட வேறுபாடு.:–

1. செகம்

2. ஆண் அவாவுறுபேடு

266. தன்மை முன்னிலை படர்க்கை மூ இடனே.

267. இலக்கணம் உடையது இலக்கணப் போலி
மரூஉ என்று ஆகும் மூ வகை இயல்பும்
இடர்கர் அடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனும் முத் தகுதியோடு ஆறு ஆம் வழக்கியல்

268. பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல் போல் பல
சொல்லால் பொருட்கு இடனாக உணர்வினின்
வல்லோர் அணி பெறச் செய்வன செய்யுள்.

269. ஒன்று ஒழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயர் அன்மொழி வினைக் குறிப்பே
முதல் தொகை குறிப்போடு இன்ன பிறவும்
குறிப்பிற் தருமொழி அல்லன வெளிப்படை

270. அதுவே,
இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர் வினை
என இரண்டு ஆகும் இடை உரி அடுத்து
நான்கும் ஆம் திசை வடசொல் அணுகா வழி.

271. செந்தமிழ் ஆகித் திரியாது யார்க்கும்
தம் பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.

272. ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிது உணர் பொருளன திரிசொல் ஆகும்.

273. செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற்று இரண்டினில் தமிழ் ஒழி நிலத்தினும்
தம் குறிப்பினவே திசைச்சொல் என்ப.

274. பொது எழுத்தானும் சிறப்பு எழுத்தானும்
ஈர் எழுத்தானும் இயைவன வடசொல்.

275. இடுகுறி காரணம் மரபு ஒடு ஆக்கம்
தொடர்ந்து தொழில் அல காலம் தோற்றா
வேற்றுமைக்கு இடன் ஆய்த் திணை பால் இடத்து ஒன்று
ஏற்பவும் பொதுவும் ஆவன பெயரே.

276. அவற்றுள்,
கிளை எண் குழூஉ முதல் பல பொருள் திணைதேம்
ஊர் வான் அகம் புறம் முதல நிலன் யாண்டு
இருது மதி நாள் ஆதிக் காலம்
தோள் குழல் மார்பு கண் காது முதல் உறுப்பு
அளவுஅறி ஒப்பு வடிவு நிறம் கதி
சாதி குடி சிறப்பு ஆதிப் பல்குணம்
ஓதல் ஈதல் ஆதிப் பல்வினை
இவை அடை சுட்டு வினாப் பிற மற்றோடு
உற்ற னவ் ஈறு நம்பி ஆடூஉ
விடலை கோவேள் குருசில் தோன்றல்
இன்னன ஆண்பெயர் ஆகும் என்ப.

277. கிளை முதல் ஆகக் கிளந்த பொருள்களுள்
ளவ் ஒற்று இகரற்கு ஏற்ற ஈற்றவும்
தோழி செவிலி மகடூஉ நங்கை
*தையல் ஓடு இன்னன பெண்பால் பெயர் ஏ.*

278. கிளந்த கிளைமுதல் உற்ற ரவ் ஈற்றவும்
கள் என் ஈற்றின் ஏற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி ஆகும்.

279. வினாச் சுட்டு உடனும் வேறு ஆம்பொருள்
ஆதி அறு துச் சுட்டு அணை ஆய்தம்
ஒன்று என் எண் இன்னனவும் ஒன்றன் பெயர் ஏ.

280. முன்னர் அவ்ஒடு வரு வை அவ்வும்
சுட்டு இறு வவ்வுங் கள் இறு மொழியும்
ஒன்று அல் எண்ணும் உள்ள இல்ல
பல்ல சில்ல உள இல பல சில
[1]இன்னவும் பலவின் பெயர் ஆகும் ஏ.

---

பாட வேறுபாடு:–

1.இன்னன

2.இவற்றுள்

281. பால்பகா அஃறிணைப் பெயர்கள் பால் பொதுமைய.

282. முதல்பெயர் நான்கும் சினைப்பெயர் நான்கும்
சினைமுதல் பெயர் ஒரு நான்கும் முறை இரண்டும்
தன்மை நான்கும் முன்னிலை ஐந்தும்
எல்லாம் தாம் தான் இன்னன பொதுப்பெயர்.

283. ஆண்மை பெண்மை ஒருமை பன்மை இன்
ஆம் அந் நான்மைகள் ஆண் பெண் முறைப்பெயர்.

284. [1]அவற்றுள்,
ஒன்றே இருதிணைத் தன் பால் ஏற்கும்.

285. தன்மை யான் நான் யாம் நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ
அல்லன படர்க்கை எல்லாம் எனல் பொது.

286. வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டும் ஆகும்.

287. தான் யான் நான் நீ ஒருமை பன்மை தாம்
யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர்.

288. ஒருவன் ஒருத்திப் பெயர் மேல் எண்ணில

289. ஒருவர் என்பது உயர் இரு பால்ஆய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற்று என்ப.

290. பொருள் முதல் ஆறு ஒடு அளவை சொல்[2] தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரான் அதற்கு இயை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகுபெயர்ஏ.

---

பாட வேறுபாடு:--

1. மகடூ நங்கை

2. தானம்

291. ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய்ப் பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.

292. பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளி என்று ஆகும் அவற்றின் பெயர்முறை.

293. ஆறன் உருபும் ஏற்கும் அவ் உருபு ஏ.

294. நீயிர் நீவிர் நான் எழுவாய் அலபெறா.

295. அவற்றுள்,
எழுவாய் உருபு திரிபு இல் பெயரே
வினைபெயர் வினாக்கொளல் அதன் பயனிலை ஏ.

296. இரண்டாவதன் உருபு ஐயே அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும்.

297. மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு
கருவி கருத்தா உடன்நிகழ் அதன்பொருள்.

298. நான்காவதற்கு உருபு ஆகும் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவு அது வாதல்
பொருள்முறை ஆதியின் இதற்கு இது எனல் பொருளே.

299. ஐந்தாவதன் உருபு [1] இன்னும் இல்லும்
நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப்பொருள் ஏ.

300. ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்
பன்மைக்கு அவ்வும் உருபுஆம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம் தன் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

---

பாட வேறுபாடு:–

1. இல்லுமின்னும்

301. ஏழன் உருபு கண் ஆதி ஆகும்
பொருள் முதல் ஆறும் ஓர் இரு கிழமையின்
இடன்ஆய் நிற்றல் இதன் பொருள் என்ப.

302. கண் கால்[1] கடை இடை தலை வாய் திசை வயின்
முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்
பின் பாடு அளை தேம் உழை விழி உழி உளி
உள் அகம் புறம் இல் இடப்பொருள் உருபு ஏ.

303. எட்டன் உருபுஏ எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பு அயல்
[2]திரிபும் ஆம் பொருள் படர்க்கையோரைத்
தன் முகமாகத் தான் அழைப்பது ஏ.

304. இ உ ஊ ஓடு ஐ ஓ ன ள ர ல
அவ் ஈற்று உயர்திணை ஓ ர அல் இவற்றொடு
ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர்
ஞ ந ஒழி அனைத்து ஈற்று அஃறிணை விளிப்பன.

305. இம் முப் பெயர்க் கண் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபாம் மன் ஏ.

306. ஐ இறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபு ஆம் அல்லவற்று ஆயும் ஆகும்.

307. ஒருசார் னவ் ஈற்று உயர்திணைப் பெயர்க்கண்
[3]அளபு ஈறு அழிவு அயல் நீட்சி அதனோடு
ஈறு போதல் அவற்றோடு ஓ உறல்
ஈறு அழிந்து ஓ உறல் இறுதி யவ்வாதல்
அதனோடு அயல் திரிந்து ஏ உறல் ஈறுஅழிந்து
அயல் ஏ ஆதலும் விளி உருபு ஆகும்

---

பாட வேறுபாடு:-

1. தலை யிடைகடை
2. திரிவுமாம்
3. அளவீறு

308. ளஃகான் உயர்பெயர்க்கு [1] அளபு ஈறு அழிவு அயல்
நீட்சி இறுதி யவ் ஒற்று ஆதல்
அயலில் அகரம் ஏ ஆதலும் விளித்தனு.

309. ரவ் ஈற்று உயர்பெயர்க்கு அளபு எழல் ஈற்று அயல்
அகரம் இ ஈ ஆதல் ஆண்டை ஆ
ஈ ஆதல் அதனோடு ஏ உறல் ஈற்று ஏ
மிக்கு அயல் யாக்கெட்டு அதன் அயல் நீடல்
ஈற்றின் ஈர் உறல் இவையும் ஈண்டு உருபு ஏ.

310. லகார ஈற்று உயர்பெயர்க்கு அளபு அயல் நீட்சியும்
யகார ஈற்றிற்கு அளபும் ஆம் உருபு ஏ.

311. னவ் ஈற்று உயர்திணை அல்இரு பெயர்க்கண்
இறுதி அழிவு அதனோடு அயல் நீட்சி.

312. ல ள ஈற்று அஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றுஅயல் நீட்சியும் உருபு ஆகும் ஏ.

313. அண்மையின் இயல்பும் ஈறு அழிவும் சேய்மையின்
அளபும் புலம்பின் ஓவும் ஆகும்.

314. நுவ்ஒடு வினாச் சுட்டு உற்ற ன ள ர
வை து தாம் இன்னன விளியா.

315. முதலை ஐ உறின் சினையைக் கண் உறும்
அது முதற்கு [2] ஆயின் சினைக்கு ஐ ஆகும்.

316. முதல் இவை சினை இவை என வேறு உள இல
உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்.

317. யாதன் உருபின் கூறிற்று ஆயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.

---

பாட வேறுபாடு:–

1. அளவீறழிவு
2. ஆகிற்

318. ஐ ஆன் குச் செய்யுட்கு அவ்வும் ஆகும்
ஆகா அஃறிணைக்கு ஆன் அல்லாதன.

319. எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினை கொளும் நான்கு ஏழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்

முதலாவது பெயரியல் முற்றிற்று

# 2. வினையியல்

320. செய்பவன் கருவி நிலம் செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.

321. பொருள்முதல் ஆறினும் தோற்றி முன் ஆறனுள்
வினை முதன் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பே.

322. அவைதாம்,
முற்றும் பெயர்வினை எச்சமும் ஆகி
ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்.

323. பொது இயல்பு ஆறையும் தோற்றிப் பொருள்பெயர்
முதல் அறு பெயர் அது ஏற்பு இல முற்றே.

324. ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக்காலத்தினும் முரண முறையே
மூ ஐந்து இரு மூன்று ஆறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூ ஒன்பான் ஆம்.

325. அன் ஆன் இறுமொழி ஆண்பால் படர்க்கை

326. அள் ஆள் இறுமொழி பெண்பால் படர்க்கை.

327. அர் ஆர் பவ்ஊர் அகர மார் ஈற்ற
பல்லோர் படர்க்கை மார் வினையொடு முடிமே.

328. து று டுக் குற்றியல் உகர ஈற்ற
ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பின் ஆகும்.

329. அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக்கண்ணது ஆகும்.

330. தன்மை முன்னிலை வியங்கோள் வேறுஇலை
உண்டு ஈர் எச்சம் இருதிணைப் பொதுவினை.

331. கு டு து று என்னும் குன்றியல் உகரம் ஒடு
அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற்று ஒருமைத் தன்மை.

332. அம் ஆம் என்பன முன்னிலையாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும்
உம் ஊர் க ட த ற இருபாலாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

333. செய்கு என் ஒருமையும் செய்கும் என் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

334. முன்னிலை கூடிய படர்கையும் முன்னிலை.

335. ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா ஈற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.

336. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய் ஊர்ந்தும் வருமே.

337. இர் ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின் அவற்று ஏவல்.

338. க ய ஒடு ரவ் ஒற்று ஈற்ற வியங்கோள்
இயலும் இடம் பால் எங்கும் என்ப.

339. [1]வேறு இல்லை உண்டு ஐம்பால் மூ இடத்தன.

340. செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்
[2]காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
[3]செய்வது ஆதி அறுபொருள் பெயரும்
எஞ்ச நிற்பது பெயர் எச்சம்மே.

341. செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம் உந்து ஆகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே

342. தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினை எச்சம்மே.

343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான் பான் [4]பாக்கின வினை எச்சம் பிற
ஐந்து ஒன்று ஆறும் முக்காலமும் முறை தரும்.

344. அவற்றுள்
முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினை முதல் கொள்ளும் பிறவும் ஏற்கும் பிற.

345. சினை வினை சினையொடும் [5]முதலொடும் செறியும்.

---

பாட வேறுபாடு:-

1.வேறுண்டில்லையும்
2.காலஞ்செயலொடு
3.செய்வதாதியும்
4.பாக்குவினையெச்சம்
5.முதலொடுசெறியும்

346. சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை.

347. ஆக்க வினைக்குறிப்பு ஆக்கம் இன்று இயலா.

348. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லாது ஆகும் செய்யும் என் முற்றே.

349. யார் என் வினா வினைக் குறிப்பு உயர் முப்பால்.

350. எவன் என் வினாவினைக் குறிப்பு இழி இருபால்.

351. வினை முற்றே [1] வினை எச்சம் ஆகலும்
குறிப்பு முற்று ஈர் எச்சம் ஆகலும் உளவே.

இரண்டாவது வினையியல் முற்றிற்று

## 3. பொதுவியல்

352. இரு திணை ஆண் பெண் உள் ஒன்றனை ஒழிக்கும்
பெயரும் வினையும் குறிப்பினானே.

353. பெயர் வினை இடத்து ன ள ர ய ஈற்று அயல்,
ஆ ஓ [2] ஆகலும் செய்யுள் உள் உரித்தே.

354. உருபும் வினையும் எதிர் மறுத்து உரைப்பினும்,
திரியா தத்தம் ஈறு உருபின் என்ப.

355. உருபு பல அடுக்கினும் வினை வேறு அடுக்கினும்,
ஒரு தம் எச்சம் [3] ஈறு உற முடியும்.

---

பாட வேறுபாடு:–

1. வினையெச்சமாதலும்
2. ஆதலும்
3. ஈற்றுருபு என்ப

356. உருபு முற்று ஈர் எச்சம் கொள்ளும்
பெயர்வினை இடைப் பிற வரலும் ஆம் ஏற்பன.

357. எச்சப் பெயர்வினை எய்தும் ஈற்றினும்.

358. ஒருமொழி ஒழிதன் இனம் கொளற்கு உரித்தே.

359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வரும் சிறப்புப் பெயர்வினை தாமே.

360. பெயர்வினை உம்மை சொற்பிரிப்பு என ஒழியிசை
எதிர்மறை இசையெனும் [1] சொல் ஒழிபு ஒன்பதும்
குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும்.

361. பெயர்ஒடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபு இடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்து ஒரு
மொழி போல் [2] நடப்பன தொகைநிலைத் தொடர்மொழி.

362. வேற்றுமை வினை பண்பு உவமை உம்மை
அன்மொழி என அத்தொகை ஆறு ஆகும்.

363. இரண்டு [3] முதல் ஆம் இடை ஆறு உருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

365. பண்பை விளக்கும் மொழி தொக்கனவும்
ஒருபொருட்கு இருபெயர் வந்தவும் குணத்தொகை.

366. உவம உருபு இலது உவமத் தொகையே.

367. போலப் புரைய ஒப்ப உறழ

---

பாட வேறுபாடு:-

1. சொல்லொழியொன்பதும்
2. நடப்ப தொமைநிலைத் தொடர்ச்சொல்
3. முதலாலிடை

மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத்து உருபே.

368. எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனும் நான்கு அளவையுள் உம் இலது அத்தொகை.

369. ஐந்தொகை மொழிமேல் பிற தொகல் அன்மொழி.

370. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனும் நான்கு இடத்தும் சிறக்கும் தொகைப்பொருள்.

371. வல் ஒற்று வரினே இடத்தொகை ஆகும்
மெல் ஒற்று வரினே பெயர்த்தொகை ஆகும்.

372. உயர்திணை உம்மைத் தொகை பலர் ஈறே.

373. தொக்குஉழி மயங்குந இரண்டு முதல் ஏழ்
எல்லைப் பொருளின் மயங்கும் என்ப.

374. முற்று ஈர் எச்சம் எழுவாய் விளிப்பொருள்
ஆறு உருபு இடை உரி அடுக்கு இவை தொகாநிலை.

375. திணையே பால் இடம் பொழுது வினா இறை
மரபு ஆம் ஏழும் மயங்கின் ஆம் வழுவே.

376. ஐயம் திணை பால் அவ் அப் பொதுவினும்
மெய்தெரி பொருண் மேல் அன்மையும் விளம்புப.

377. உயர்திணை தொடர்ந்த பொருள் முதல் ஆறும்
அதன்ஒடு சார்த்தின் அத்திணை முடிபின.

378. திணைபால் பொருள் பல விரவின சிறப்பினும்
மிகவினும் [1] இழிபினும் ஒரு முடிபினவே.

---

பாட வேறுபாடு:–

1. இழிப்பினும்

379. உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே

380. ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓர் இடம் பிற இடம் தழுவலும் உளவே.

381. தரல் வரல் கொடை செலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.

382. இறப்பு [1] எதிர்வு நிகழ்வு எனக் காலம் மூன்றே.

383. முக்காலத்தினும் ஒத்து இயல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத்தான் ஏ.

384. விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉம் முக்காலமும் ஏற்புழி.

385. அறிவு அறியாமை ஐயுறல் கொளல் கொடை
ஏவல் தரும் வினா ஆறும் இழுக்கார்.

386. சுட்டு மறை நேர் ஏவல் வினாதல்
உற்றது உரைத்தல் உறுவது கூறல்
இனமொழி எனும் எண் இறையுள் இறுதி
நிலவிய ஐந்தும் அப் பொருண்மையின் நேர்ப.

387. வினாவினும் செப்பினும் விரவா சினைமுதல்.

388. எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே.

389. வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறு அவற்று எண்ணும் ஓர் பொதுவினை வேண்டும்.

390. வினைசார்பு இனம் இடம் மேவி விளங்காப்
பலபொருள் ஒருசொல் பணிப்பர் சிறப்பு எடுத்தே.

---

பாட வேறுபாடு:-

1. (1) எதிர்நிகழ்பென (2) எதிர்புநிகழ்பென

391. எழுத்தியல் திரியாப் பொருள் திரி புணர்மொழி
இசைத் திரி பால்தெளிவு எய்தும் என்ப.

392. ஒருபொருள்மேல் பல பெயர் வரின் இறுதி
ஒருவினை கொடுப்ப தனியும் ஒரோ வழி.

393. திணை நிலம் சாதி குடியே உடைமை
குணம் தொழில் கல்வி சிறப்பு ஆம் பெயரோடு
இயற்பெயர் ஏற்றிடில் பின்வரல் சிறப்பே.

394. படர்க்கை முப் பெயரோடு அணையின் சுட்டுப்
பெயர்பின் வரும் வினை எனில் பெயர்க்கு
எங்கும் மருவும் வழக்கு இடைச் செய்யுட்கு ஏற்புழி.

395. அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்
இரண்டு மூன்று நான்கு எல்லை முறை அடுக்கும்.

396. இரட்டைக் கிளவி இரட்டின் பிரிந்து இசையா.

397. ஒருபொருள் பலபெயர் பிரிவு இல [1]வரையார்.

398. ஒருபொருள் பன்மொழி சிறப்பினின் வழா.

399. இனைத்து என்று அறிபொருள் உலகின் இலாப்பொருள்
வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டும்.

400. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.

401. பொருள் முதல் ஆறு ஆம் அடைசேர் மொழி இனம்
உள்ளவும் இல்லவும் ஆம் இரு வழக்கினும்.

402. அடைமொழி இனம் அல்லதும் தரும் ஆண்டு உறின்.

---

பாட **வேறுபாடு**.:–

**1. வரையா**

403. அடைசினை முதன்முறை அடைதலும் ஈர்அடை
முதலோடு ஆதலும் வழக்கியல் ஈர் அடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.

404. இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்.

405. காரணம் முதலா ஆக்கம் பெற்றும்
காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்
ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்
இருமையும் இன்றியும் இயலும் செயும்பொருள்.

406. தம்பால் இல்லது இல் எனின் [1] இனனாய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொல் சுருங்குதற்கே.

407. ஈ தா கொடு எனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்பு உரை.

408. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே.

409. கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப்படுமே.

410. உருவக உவமையில் திணை சினை முதல்கள்
[2] உறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

411. யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை [3] விற்பூட்டு
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்று எனப் பொருள்கோள் எட்டே.

---

பாட வேறுபாடு.:–

1. இனனாவுள்ளது
2. பிறழ்வும்
3. விற்பூண்

